ஆர்யதர்மம்
புத்தகம் 17, ஸஞ்சிகை 44
ஆங்கிரஸ, கார்த்திகை 23
[December 08, 1932]

Record no. 287

*Āryatarmam*

*Puttakam 17, sañcikai 44*

*Āṅkirasa, Kārttikai 23*

*[December 08, 1932]*

Record no. 287

ஸ்ரீ திரிபுரசுந்தரீ ஸமேத ஸ்ரீசந்திரமௌளீசுவாராய நம:

# ஆர்யதர்மம்.

## முருகனுக்கும் முனியனுக்கும் ஸம்வாதம்.

பள்ளியில் படித்துவரும் இவ்விரு பையனும் இவ்வூர் காவேரியாற்று மணலில் வேடிக்கையாக உட்கார்ந்துகொண்டு சமாசாரப் பத்திரிகை ஒன்றை ரஸமாக வாசித்துக்கொண்டிருந்தார்கள். ஒவ்வொரு விஷயத்திலும் ஒருவருக்கொருவர் எதாவது சில கேள்விகளைக்கேட்டுக்கொண்டும் ஸமாதானம் சொல்லிக்கொண்டுமிருந்தார்கள். இப்படியிருக்கையில் தீண்டாமை விலக்கு விஷயமாய் வினவும், விடையும் இவர்களுக்குள் ஏற்பட்டுவிட்டது. அதாவது:-

கேள்வி:—அடே! முனியா? தாழ்ந்த வகுப்பினருக்குக் குருவாயூர் கோவிலைத் திறந்துவிட ஸனாதனிகள் எவ்வளவு எடுத்துச் சொன்னும் கேட்காமல் காந்திஜி பிடிவாதங்கொண்டிருப்பது நியாயமா?

விடை:—என் நியாயமில்லை? காந்திஜியினிடத்தில் அநியாயமா? காலத்தின் தேவையால் அது அவச்யந்தானே?

கே:—தாழ்ந்த வகுப்பினருக்கு ஆலயக் கதவுகளைத் திறப்பதில் என்ன பலன்?

வி:—மேல்வகுப்பினருக்கு எதுவோ, அதுதான் தாழ்ந்த வகுப்பினருக்கும்.

கே:—ஹிந்துக்களின் கோவிலைத் தாவளி விடுதியாக நினைப்பவர், தாவளி விடுதியாக இல்லாத புதுக் கோவிலையல்லவா கட்டிக்கொடுக்கவேண்டும். ஹிந்து தேவாலயத்தில் இவருக்கென்ன பிடிவாதம்?

வி:—ஹிந்துக்களின் கோவில் எவ்விதம் கருதப்பட்டாலும் அது எல்லா ஹிந்துக்களுக்கும் பொதுதானே?

கே:—இதுவரையில் பொதுவில்லை. இதற்காதாரமுமில்லை. இப்படியிருக்க, ஹிந்துக்கோவிலில் என்ன பிடிவாதம்?

வி:—கடவுள் எல்லோருக்கும் பொதுவல்லவா?

கே:—அப்படியாயின் நாங்கள் மலையிலுள்ள கல்லைக் கடவுளாகக் கொண்டாடுகிறோம். விருப்பமிருந்தால் அவர்களும் ஒரு கல்லைவைத்துக் கடவுளாகக் கொண்டாடட்டுமே! ஹிந்துக்கோவிலுள்ள கல்லில் என்ன பிடிவாதம்?

வி:—ஹிந்துக்கோவிலிலுள்ள கல்லில்தான் கடவுள் வசிக்கிறார். ஏனைய கற்களில் கடவுள் வசிக்கவில்லை. ஆகையால் பிடிவாதம் நாணயமானதே.

சுபம்.

V. J. S.

# ஆர்ய தர்மம்.

ஆங்கிரஸஹு கார்த்திகைமீ˜ உடூ

## குரு நிந்தை மஹாபாபமே.

"சிஷ்யர்களுக்குக் கண் கொடுப்பவன் ஆசாரியன்" என்பது ஹிந்துமத ஸித்தாந்தம். இவ்வுலகமெல்லாம் சுற்றினும் எவ்வளவு கற்றறிந்தாலும் அதிநுட்ப ஆராய்ச்சித் திறமைப் பெற்றிருந்தாலும், ஆசாரியன் ஒருவன் இல்லாவிட்டால் மதஞானம் தெரியாது. மதம் என்பது லௌகிக வைதிக ஞானங்களின் முடிவுதான். பெற்றோருக்கும் மக்களுக்கும் எவ்வித முறையோ அவ்வித முறையே ஆசாரியனுக்கும், சிஷ்யனுக்கும். ஆசார்யபீடங்களில் பக்திவிசுவாஸமில்லாவிடின் மதஞானம் பிறவாது. ஆசார்ய பீடத்தை ஸாமான்யமாகக் கருதி அவமதித்துப்பேசுகிறார் ஸி. ராஜகோபாலாசாரியார். அக்ஞானத்தில் ஆழ்ந்திருந்தும் தமக்கு எல்லாந்தெரியும் என்னும் அஹங்காரத்தினால் தாம் கெடுவதுமின்றி பிறரையும் கெடுக்க இவர் முற்படுகிறார். குருடன் குருடனுக்கு வழிகாட்டினாற்போல் இவரும் இவரது உபதேசத்தைக் கேட்போரும் முடிவில் பெருங்குழியில் வீழ்வார்கள் என்பது நிச்சயம். இவ்விதப் போலி ஆசாரியன் உலகில் எங்குந்திரிவார் பிச்சைக்குப் போகுவோன் பெருங்கொடையளிக்க விரும்புவது போன்றது, இப்போலியாசிரியர் பிறருக்குபதேசிக்கத் துணிவது.

சிறந்த தத்வமும், ஞானமும், உள்ள உண்மை ஆசாரியரை ஜனங்கள் தெய்வமெனக் கொண்டாடுகிறார்கள். அப்படிப்பட்ட தேசிகர்களிடந்தான் உபதேசம் பெறலாம். இவர்களின் யோக்யதையையும், தீர்க்கதிருஷ்டியையும், அறிய இவருக்கு அறிவு போதாததனால்தான் இப்படி அவமதிப்புக்கு இடமேற்பட்டது, இவரும் "மதம் குலைந்து போகிறதென்று" கூக்குரலிடுகிறார். மதத்தின் இயல்பை உண்மையாக சிரத்தையுடன் இவர் தெரிந்துகொண்டாரா? வைதிகமதச் சிரத்தை உண்மையாக இவரிடம் உண்டா? அர்த்தமில்லாத வெறும் வார்த்தைகளும், குதர்க்கங்களுமே மிகுந்தன. "ஜனங்களுக்கு நாங்கள் நன்மையைத் தேடுகிறோம், சீர்திருத்துவோம், என்கிற வீண் ஆடம்பரங்களே இவரிடம் அதிகமாகக் காண்கின்றன. இவருக்கும் லோகாயத மதத்தாருக்கும் வித்யாஸம் யாதொன்றுமில்லை. இவருக்கு இவ்வுலக சீர்திருத்தமே மானிட வாழ்க்கையின் ப்ரயோஜனமென்று அபிப்பிராயம்.

அக்ஞானமும், மூர்க்கமும் நிறைந்த இத்தன்மையுள்ளோர் தங்கள் ஸ்வரூபத்தை மறைக்காமல் பகிரங்கப்படுத்தி, நாஸ்திகர்களோடு சேர்வார்களாயின் உலகத்துக்கு க்ஷேமம் விளையும். மதம் மாற்றப்பட வேண்டும்' என்று இவர் சொல்லுகிறாரே, அதைச் செய்ய இவருக்கு ஆள் கூட்டத்தைத் தவிர வேறு என்ன அதிகாரமிருக்கிறது. வைதிகர்களுக்கு யோசனையில்லையென்றும் பிடிவாதம் பலமாய் இருக்கிறதென்றும் இவர் சொல்வது வெகு ஆச்சரியமாயிருக்கிறது. இவர்தான் யோசனையில்லாமல் பிரஸ்தாப சீர்திருத்த இயக்கத்தில் பிடிவாதம் கொண்டிருக்கிறாரேயன்றி, வைதிகர்களல்ல. தீண்டாமை விலக்கு இயக்கத்திற்கு பிரமாணம் என்ன? பயன் என்ன? அவச்யம் என்ன? என்ற கேள்விகளுக்கெல்லாம் இவரும் இவரது ஆசாரியரும் இவர் கூட்டத்தாரும் சொல்லுங்காரணங்கள் அபூர்வங்களாகவும், ஊற்றுக்கு நிற்கக் கூடாதவைகளுமாகவும், இருக்கின்றன. இவர்களுடைய கூற்றுகளையெல்லாம் வேதவாக்யமாக பொதுஜனங்களும் ஏற்றுக்கொண்டு கூத்தாடினால் விவேகிகளும் ஏன் அவ்விதம் கூத்தாடவில்லை என்று இவர் அவர்களை அவமதிப்பது அடாத செய்கைகளில் ஒன்றாகும்.

பாதிரிமார்கள் பஞ்சமர்களிடம் செய்துவரும் வேலைகளை பீடாதிபதிகள்போய் பார்க்கவேண்டும் என்று இவர் அவர்களை அழைத்து ஏளனமாகப் பேசுவது எவ்வளவு ஸாஹஸம்? பாதிரிமார்கள் எந்தெந்த வழிகளால் பஞ்சமர்களை கைவசப்படுத்திக் கொள்கிறார்களோ? அந்தந்த வழிகளால் அவர்களை அழைத்து வசப்படுத்திக்கொள்வதை யார் தடுத்தார்கள்.

'கடவுள் உங்களுக்கில்லை' என்று பாதிரிமார்கள் பஞ்சமர்களிடம் பிரசாரம் செய்வார்களானால் "கடவுள் உண்டு" என்ற நம்பிக்கை ஏற்படுவதற்காக அவர்களுக்கென்றே தனிப்பட்ட கோவில்களைக்

கட்டிக் கொடுக்க வேண்டியதுதான் நோான எதிர் பிரசாரமாகும். இதுதான் நமது கடமையுமாகும்.

இந்த விஷயத்தில் ஸனாதனிகளிடமிருந்து, எவ்வித உதவியையும் இவர் எதிர்ப்பார்ப்பது நியாயமில்லை. உதவிபுரிய இஷ்டமுள்ள ஸனாதனிகளிடம் அதை இவர் பெருவதில் ஒருவருக்கும் ஆக்ஷேபமில்லை. இதற்கு முன்பு ஸனாதனிகள் எத்தனையோ சந்தர்ப்பங்களில் காங்கிரஸ்ஸுக்குப் பண உதவி செய்திருக்கிறார்கள். அதையெல்லாம் இவரும், காந்திஜீயும் மறந்துவிட்டார். காந்திஜீ தமது 7-வது அறிக்கையில் ஸனாதனிகளைப் பார்த்து, "நீங்கள் இதுவரையில் ஒன்றும் செய்யவில்லை. பிரஸ்தாப விஷயத்திலாவது நீங்களும், சீர்திருத்தக்காரர்களும், பொதுவாக ஒப்புக்கொண்ட சௌகரியங்களைச் செய்ய பணம் உதவுங்கள்" என்று பேசியிருக்கிறார். உங்களுக்கு ஸனாதனிகள் விரோதிகள் என்ற பாவனை இருப்பதால் அவர்கள் உங்களுடன் பிரஸ்தாப இயக்கத்தில் ஒத்துழைக்கமாட்டார்கள் ஆகவே தாழ்ந்த வகுப்பினரை உயர்த்துவதில் அதி தீவிர ஊக்கம்கொண்ட தங்களினத்தார் தான் அவர்களுடைய சௌகரியங்களைச் செய்யப் பணவுதவி செய்ய வேண்டும். நல்ல எண்ணத்துடன் எங்களுடைய உதவியைத் தாங்கள் எதிர்ப்பார்ப்பதாக எங்களுக்குத் தோன்றவில்லை.

தாழ்ந்த வகுப்பாரை மத நம்பிக்கை அடையும்படிச் செய்ய ஆலயப்ரவேசம்தான் முதற்படியோ? தேவாலயப்ரவேசந்தான் ஹிந்து மதமோ? இந்து மதத்தைப்பலப்படுத்த இதுதான் அவசியமோ? (வியவஸ்தை செய்பவராகிய) தங்களுக்கும் பாதிரிமார்களுக்கும் உள்ள வித்யாசம் என்ன? தாழ்ந்த வகுப்பினர் ஆலயப்ரவேசம் செய்துவிட்டால் பாதிரிமார்களின் வேலை ஓய்ந்துவிடுமா? தாழ்ந்த வகுப்பினர் தான் அவர்களின் வலையில் சிக்கிக் கொள்ளாமல் அப்போது தப்பிவிடுவார்களா? தாழ்ந்த வகுப்பினர்தான் ஒன்றுந்தெரியாதவர். ஜாதி இந்துக்களில் பல அறிவாளிகளும் அப்பாதிரிமார்களின் மாயவலையில் அகப்பட்டுக்கொண்டு அங்குமில்லாமல் இங்குமில்லாமல் திரிசங்குமஹாராஜன் போல். நடுவாந்தரத்தில் தொங்குகிறார்களே. அதற்கென்ன பரிஹாரம் ஆதலால் பாதிரிகளைக் கண்டிப்பதற்காக ஆலயப்ரவேச இயக்கம் அவசியமில்லை,



பீடாதிபதிகளைக்குற்றம் சாட்டத் தக்கவர்களென்று ஸி.ராஜகோபாலாசார் எழுதியிருக்கிறார். இது எவ்வளவு ஸாஹஸம்! பாருங்கள் பழயஸம்ப்ரதாயத்தை ஆதரித்தால் என்ன குற்றம்? மதமாறுதல் முன் செல்லும் வழி அல்லவென்று அவர்களின் கருத்து இவரல்லவா அவர்களின் கருத்துக்கிசைந்து நடக்க வேண்டும். காந்திஜீயின் பிடிவாத ஸ்வபாவத்தையும் மெதுவாக திருப்ப எத்தனிக்கவேண்டும். தமது கடமையை உணாாத குற்றம் இவரிடந்தானே இருக்கின்றது தம் குற்றத்தைப் பிறரிடம் கற்பித்துக் கூறுவது ஸாஹஸத்திலும் ஸாஹஸமே.

"தாழ்ந்த வகுப்பினரை, தனித்தனியாக ஒதுக்கிவைத்திருப்பதால் ஹிந்து மதத்திற்கே துர்பலம் ஸம்பவித்துவிட்டது" என்று இவர் அனுதாபப்படுகிறார். இதனால் துர்பலமென்பதில்லை. அது துர்பலந்தானென்ற பிடிவாதமிருந்தால் நமது மதத்தில் துர்பல மெல்லாவற்றையும் துர்பலம் என்றே தைர்யமாய் ஒப்புக்கொள்வதில் இவருக்கு என்ன ஆக்ஷேபம்? நமது மதத்தில் போல் அயல்நாட்டாரின் மதத்திலோ, முகம்மதிய மதத்திலோ, தம் கொள்கையிலோ வேறெந்த மதத்திலோ துர்பலமில்லை என்று இவரால் சொல்ல முடியுமா? ஆகவே அதைப் பலப்படுத்த வேண்டிய அவசியமே இல்லை.

இராஜ்யதந்திர உயர்வும், ராணுவத்தில் பெருமையும் சாதிக்க வேண்டும் என்பது எப்போதும் ஜாதியார்கொண்ட கருத்தல்ல நமது ஜாதியாருக்குள்ள கருத்து வேறு. இவ் வுலகத்தினின்றும் விலகி ஏகாந்தமாயிருந்துகொண்டு அத்யாத்ம தத்வ விசாரம் செய்வதும், அதற்குப் பங்கம் நேர்ந்தபொழுதெல்லாம் பிரமாணப்படி வியவஹரித்துக்கொண்டு மீண்டும் அவ்விசாரத்திலேயே அமர்ந்திருப்பதுமே நம் முன்னோர்களின் ஸ்வபாவம். இதனால் தான் இதுவரையில் பல ஜாதியார் ஹிந்து ஜாதியை தம்முடன் சேர்த்த போதெல்லாம் நமது ஜாதி, மதம், சாஸ்திரம், ஆசாரம், இவையனைத்தும் நசிக்காமல் உலகமெங்கும் வியாபகமாய்ப்பரவலாயிற்று. இந்திய அரசாங்கம் நம் கைவசம் கிடைத்துவிட்டால் ஸ்வதந்திரம் கிடைத்துவிடுமா? சரீரமிருக்குமளவும் போகமோஹபாவசர்களாக இருக்குமளவும் காலதேசங்களுக்குட்பட்டு இருக்குமளவும் நாம் அடிமைதானே. உத்தம லோகம் சென்றாலும் அடிமைத்தனம் நம்மைவிட்டு அகலுவதில்லை என்று உபநிஷதங்கள்

உத்கோஷிக்கின்றனவே. ஆகையால் உள்ளும், புறமும், உண்மை ஸ்வதந்திரம்இருக்கவேண்டுமென்பதே நம்முன்னோர்கள்கருத்தாம்.

ஸி. ராஜகோபாலாசார், ஸ்ரீமத்ராமானுஜரை நவீன சீர்திருத்தக்காரர்களைப் போல் கருதுகிறார். அது கொஞ்சமும் சரியில்லை. ஸ்ரீ மத்ராமானுஜர் இவர்களைப்போல் பழைய வழக்கங்களை அழிக்கவில்லை. புதிய மாறுதல்கள் உண்டாக்குவது அஸாத்யம் என்பது அவர்களுக்கு நன்றாய் தெரியும். ஆகவே அவர்கள் புதிய சீர்திருத்த வழியை அனுஸரிக்காமல் ஜனங்கள் அக்காலத்தில் அனுஷ்டித்து வந்த மதத்தைப் படிப்படியாய் உயர்ந்த நிலைக்குக் கொண்டுவரும் வழியைத் தேடினர். அவர்கள் அப்படிச் செய்யாமல் நவீன சீர்திருத்தக்காரர்களைப்போல் மற்றொரு நவீன ஸ்வதந்த்ர வழியை அனுஸரித்திருப்பார்களானால் அவர்களின் முயற்சியெல்லாம் வீணாகிவிருந்திராகாமல் இருப்பதற்குக் காரணம் என்ன? அவர்கள் தற்காலத்திய சீர்திருத்தக் காரர்களைப் போல் வேதம் ஸ்ம்ருதி முதலிய ஹிந்துமதப் பிரமாணக்ரந்தங்களை உதறி தள்ளிவிட்டு வீண்டம்பரங்களை வைத்துக்கொள்ளவில்லை என்பதுதான். அவரவர் அதிகாரத்திற்குரிய காரியங்களாலும், ஸாதனங்களாலும், அவரவர் உத்தமனான நிலையைப் படிப்படியாய் அடையவேண்டுமென்பதே பகவத்ராமனுஜர் அபிப்பிராயம். இதனையறியாமல் ஸ்ரீ ராமானுஜருக்கு வித்யாஸம் பாராட்டாத குணம் உண்டு என்று சொல்வது முற்றிலும் பொய்யே ஆகும். ஆகையால் ஆஸ்திகர்களே! மகான்களாகிய குருபீடங்களையும், தெய்வத்தையும், மதத்தையும், இகழ்ந்து பேசுவது பெரும் பாபமாகும். இதற்கு ப்ராயச்சித்தமே இல்லை

சுபம்!

V. ஜகதீசுவர சாஸ்திரிகள்.

---

## காந்தி அவர்களின் உபவாஸ தத்வமும் மத ஸித்தாந்தமும்.

---

காந்தி அவர்கள் இந்திய நாட்டின் மதத் தலைவரல்ல. அவர் எந்த மதத்தைச் சேர்ந்தவராகச் சொல்லிக்கொள்ளுகிறாரோ, அது



சம்பந்தப்பட்ட நூல்களை அவர் உணராததும் மதத்தில்கூறப்பட்ட அனுஷ்டான முறைகளைத் தகர்க்க முயற்சிப்பதும் அத்தாக்ஷிகளாகும். உலகத்தில் ஸ்ருஷ்டி முதல் பாஹ்யமாயுள்ள ராஜீய விடுதலைக்கான பல சுதந்திர யுத்தங்கள் நடந்தேறியுள்ளன. அவற்றுள் தற்போதைய இந்திய சுதந்தரப்போர் பலாத்காரத்தையும் ஆயுத பலத்தையும் நிரஸ்கரித்து சாத்விக அஹிம்ஸா முறையில் நடைபெறுவதை ஒருவாறு போற்றுகிறோம். ஆனால் இந்த அஹிம்ஸாமார்க்கமானது எல்லா அஸ்திவாரங்களையும் போதிய அளவு கொண்டதாயுள்ள அரசாங்க முறையை இதர வழிகளால் மாற்றுவது சாத்யமில்லாததால் வேறு வழியின்றி கடைசிப்பக்ஷமாகவே ஸ்வீகரிக்கப்பட்டிருக்கிறது. பலாத்கார வழிகள் இந்திய நிலைமைக்கு ஏற்றவை அல்ல. அவை தவறுதலாகக் கைக்கொள்ளப் பட்டால் இந்தியர்களுக்கே முதலாவதாக பெருத்த கஷ்டங்கள் ஏற்படும். இரண்டாம் பக்ஷமாகவே எதிர்தரப்புக்கு நஷ்டங்கள் ஏற்படக்கூடும். இவ்விதமாக வேறு வழியின்றி ஏற்றுக்கொள்ளப் பட்டிருக்கும் போராட்டமானது சித்த சத்தியை அஸ்திவாரமாகக் கொண்டதாகச் சொல்லப்படமுடியாது. இப்பேற்பட்ட ராஜீய இயக்கத்திற்கு மத சம்பந்தத்தைப் பிணைப்பது ஒழுங்கு முறை தவறிய சூழ்ச்சியாகும்.

சாத்விகரீதியைப்புகழலாமாயினும் லக்ஷயத்தை அடைவதற்காக அனுஷ்டிக்கப்படும் பிரசாரங்கள் தவறாக இருந்தால் அவைகளை எதிர்த்துப் போராடாமலிருக்கமுடியாது. ராஜீய லக்ஷயத்தை நோக்கமாகக்கொண்டு ஆரம்பமான இயக்கம் முற்றிலும் மத விஷயங்களில் திரும்புவது அக்ரமமாகும். தர்மம் அதர்மம் இவைகளை ஆதரித்து வந்திருப்பவர்கள் இருதரப்பிலும் அந்தந்த ஸமயங்களில் பெரிய தியாகங்களைச் செய்திருக்கிறார்கள். இதன்மூலம் கேவலம் த்யாகாம்சத்தைக்கொண்டே ஸத்யமார்க்கத்தை நிர்த்தாரணம் செய்யமுடியாது. எத்தகைய கஷ்டங்கள் ஏற்பட்டாலும் விட்டுக்கொடுப்பதில்லையென்று ராவணன் கம்ஸன் முதலியவர்கள் அதர்மத்திற்காக உயிரையும் தியாகம் செய்திருக்கிறார்கள். தர்மாதர்ம பரிசீலனையின்றி அதர்மப்ரவிருத்தி அதிகமாயுள்ள தேசமக்களின் மெஜாரிடி பலம் கட்டுக்கடங்காத மனச்சாட்சி என்பதாகிய அதர்மப்போக்குக்கு ஆதாரங்களை பிரகடனம் செய்து

ஜனங்களைத் தவருன வழியில் இழுத்துச் செல்வது ராஜீய அபிவிருத்திக்கு முட்டுக்கட்டையாகும். மத துரோகமும் ஆகும்.

சாதாரணமாக ராஜீய இபக்கங்கள் தேசக்ஷேமத்தை அளிக்கின்றன என்ற அளவில் அவைகளை அங்கீகரிக்கலாம். அவைகள் மத தர்மங்களை அபிவிருத்தி செய்யவேண்டியது ஓர் முக்யாம்சம். இப்படியிருக்க பாரமார்த்திக விடுதலைக்கான மத விஷயங்களில் எதிர் பிரசாரம் செய்வது நேர்மையாகாது. மத தர்மங்களும் பரமார்த்திக அனுஷ்டான க்ரமங்களும் உன்னத தசையில் இருந்தாலல்லது கேவலம ராஜீய விடுதலை தேசத்தின் சௌகர்யங்களை எள்ளளவும் விருத்தி செய்ய முடியாது.

காந்தி அவர்களைத் தலைமையில்கொண்ட ராஜீயஸ்தாபனமாகிய காங்கிரஸும் அதன் கிரியாம்சமாகிய சட்டமறுப்பியக்கமும் தேச ஜனங்களுக்கு பூர்ண தியாக ஊழியமும் கஷ்டங்களைச் சகிக்கும் ஆற்றலும் இல்லாதகாரணத்தாலோ, தேச மக்களின் ஆதரவு இல்லாததாலோ, அல்லது கவர்மெண்டின் நிலைமைகளுக்கேற்ற பொருத்தமான தீவ்ர நடவடிக்கைகளாலோ ஒடுக்கப்பட்டு ஓய்ந்துவருகிறது. பிரகிருதம் உலகத்தில் எல்லா இபக்கங்களுக்கும் அவைகளின் வேகம் மந்தப்பட்டுவருகிறது.

கவர்மெண்டார் நேரடியான முறையில் காங்கிரஸை அடியுடன் ஒடுக்க முற்படாவிட்டாலும் சட்டமறுப்பியக்கத்தைச் சிறிதும் தலையெடுக்கவிடார்கள் என்பது அவர்களுடைய கண்டிப்பான அறிக்கைகளிலிருந்து தெரிகிறது. காந்தியவர்கள் இயக்கம் படுத்துவருவதையும், கவர்மெண்டின் நடவடிக்கைகள் தளர்த்தப்படாமலிருப்பதையும் உணர்ந்து, தொடுத்த காரியத்திலிருந்து விடுவித்துக்கொள்ள முடியாததையும் தன் பெயரையும் புகழையும் விட்டுக்கொடுக்க மனமில்லாமல் நினைத்து நினைத்து, தடைப்பட்ட எல்லா சக்திகளையும் தேச ஒற்றுமை என்ற போலிப் பெயருடன் தீண்டாமை ஒழித்தலாகிய கலக்கத்தை ஜனங்களிடையே பரப்பி வருகிருர்.

தானும் ஓர் ஸனாதனியென்றும் தனக்குவடமொழியில் அதிக பரிசயமில்லையென்றும், கீதைஒன்றுதான் தனக்குப்பிரமாணமென்றும் அதன் முக்கிய கொள்கைக்கு முறண்படும்வண்ணம் எங்கு எப்பொழுது பிரசுரிக்கப்பட்டது. அல்லது காணப்படுவதாக



இருந்தாலும் இதர புஸ்தகங்களோ, மத நூல்களோ தனக்குப் பிரமாணமல்லவென்றும் சொல்லிக்கொண்டு, தீண்டாதாரைக் கைதூக்கிவிடுவதாகிய மனோபாவத்துடன் உபவாச மூலம் தற்கொலை செய்துகொள்ளவும் தயாராகிவருவதாகத் தெரிகிறது.

சீர்திருத்தக்காராகிய இவர் ஸனாதனி என்று தன்னை அழைத்துக்கொள்வதில் அர்த்தமில்லை. அவர் தன்னை ஸனாதனியாக அழைத்துக்கொள்வதை நாம் ஆக்ஷேபிக்கவில்லை. ஆனால் அது பொருத்தமில்லையென்றுமாத்திரம் சொல்லுகிறோம்.

ஓர் நியாயவாதி அவருக்கு அபிமதமான குறிப்பிட்ட சட்டப் புத்தகத்தைத் தனக்கு ஆதாரமாகக்கொண்டு, அதன் முக்கிய நோக்கத்திற்கு மாறுன அல்லது முரண்படுகின்ற மற்ற எல்லா சட்ட நூல்களும் நிராகரிக்கத்தக்கவை என்று சொல்வதுபோலவும், ஓர் அனுபவமில்லாத வைத்தியர், இதுகாறும் தன்னால் கைக்கொள்ளப்பட்டிருக்கும் சிகித்ஸா ரீதிக்கு மாறு படுகிற எல்லா சிகித்ஸா அபிப்ராயங்களும் நடவடிக்கை முறைகளும் ஒழிக்கத்தக்கவை என்று வாதாடுவதுபோலவும், காந்தி அவர்களின் மத தத்வம் இருந்துவருகிறது.

குறிப்பிட்ட நூலில் எந்த உத்தேசத்துடன் அது ப்ரவிருத்தி அடைந்ததோ அதுமாத்திரம்தான் விவரிக்கப்பட்டிருக்கும்.இதனை ஆதாரமாகக்கொண்டு, வேறு புத்தகங்களில் கூறப்படும் தத்வங்களை ஒதுக்கிவிடுவது அறியாமையாகும். பொதுவாக, எவருக்கு அதிகநூல்களின் அறிவும், அதில் கூறப்பட்ட தத்வ அனுபவமும், நிறைந்திருக்கின்றனவோ, அவருடைய அபிப்ராயந்தான் ஒப்புக்கொள்ளத்தக்கது. இந்த ரீதியில் ஸனாதனிகளுக்கு வேதஸ்மிருதி தர்மசாஸ்திரங்களாகிய யாவும் பிரமாணங்கள். இவ்வாறிருக்க, காந்தியவர்கள் கீதையைமாத்திரம் பிரமாணமாகக்கொள்வதாயின் அவரைஉண்மை ஸனாதனியாக எப்படிக் கூறலாம்?பிரமாணங்களை அங்கீகரித்தும், அனுஷ்டானத்தில் வைத்துக்கொள்ளாதவர்கள் ஸனாதனிகளில் கடைசிக் கோஷ்டியினாரவர். காந்தியோ அந்தப் பிரமாணங்களையும் மறுப்பதாக இருந்தால் நவீன சீர்திருத்தக்காரர் என்றேஅவரைச் சொல்லவேண்டும்.

காந்தி அவர்களது அபிப்பிராயத்தை அனுசரித்து கீதையைப் பிரமாணமாகக் கொண்டு சர்ச்சை செய்ய முற்படுவோம். கீதை ஓர் மத நூல். இதைப்பற்றிய ஆராய்ச்சியில், காந்தியின் ஏகதேசமான அபிப்பிராயமே முடிவானது என்பது பரிஹாசத்திற்கு ஆஸ்பதமாகும். மத நூல் விற்பன்னர்களுடையவும் மதத் தலைவர்களுடையவும் ஸமாஜத்தில் கீதையின் முக்ய அபிப்பிராயம், பொதுவான கொள்கை, இவைகள் என்னவென்பதை தீர்மானம் செய்யவேண்டியிருக்கிறது. அந்த முடிவான ஸித்தாந்தம்தான் கீதாதாத்பர்யக்ஞர்களின் மெஜாரிடி அபிப்பிராயமாகும். இங்ஙனமிருக்க காந்தியின் போக்கு ஒன்றுக்கும் கட்டுப்படாததாயும் யதேச்சையானதாகவும் இருந்துவருகிறது.

இங்கிலையில் தீண்டாதார் ஆலயப்ரவேசத்திற்காக ஜனவரி ௴ 2உயில் உபவாஸம் துவக்கப்போவதாக சொல்லப்படுகிறது. கீதையின் கொள்கை நிர்ணயிக்கப்படாத நிலையில், இது மதசம்பந்தமாக கருதப்படக் கூடாது. மேலும், சாத்விகப்ரசார மார்க்கங்களால் கொள்கைகள் பரப்ப வேண்டியிருக்க, உபவாசமாகிய பிடிவாதம் நாணயமானதல்ல என்று தோன்றுகிறது. காந்தியவர்களின் போக்கு தர்மமாகவோ அல்லது அதர்மமாகவோ இருக்கலாம். எப்படியிருப்பினும், சாவதானமாக பிரசாரங்களை விடுத்து, உயிரை மாய்த்துக்கொள்ளும் ஆத்மஹத்தியில் அவரது உபவாசம் முடியுமாயின், அந்த பாபமும் சேர்ந்து அதிக அதர்ம சம்பந்தமான பாப ஜன்மமே உண்டாகும். 'உண்மையில் ஸத்யத்தில் நம்பிக்கை இருக்குமானால் தற்கொலை செய்துகொள்வேனென்று சொல்வது தவறான கொள்கையாகும். புனா ஒப்பந்தங்களில் தீண்டாதார் ஆலயப்ரவேசம்காணப்படாததும், தீண்டாதார் முக்கிய பிரதிநிதியாகிய அம்பேத்கர் தற்சமயம் ஆலயப்ரவேசம் அவசியமல்ல, கைதூக்கிவிட அனேக வழிகள் இருக்கின்றன, என்று சொன்னவார்த்தைகளும், காந்தியை நிதானிக்கச் செய்யுமாக. அவசரப்பட்டு நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளப்படுவதற்கு முன்னதாக, 1. கீதாப்ரமாணம். 2. மனச்சாக்ஷி. 3. மெஜாரிடி பலத்வம், 4. தர்மத்தின் ஸ்வரூபம், இவைகளை நாட்டினருக்கு வெளியிடுவதற்கு சௌகர்யமாக ஸனாதனமத ஸம்பந்தமான இவ்விஷயத்தில் ஸனாதனமதத் தலைவர்களின் மகாநாட்டை காந்திஜீ கூட்டுவாராக. காந்தியவர்கள் தன்னை ஸனாதனி என்று



சொல்லிக்கொள்வதால், இந்த ஏற்பாட்டில் உதாஸீனமாயிருந்தாலும் அல்லது கிராகாணம் செய்தாலும், அவரது ஸித்தாந்தத்தில் அதர்மத்தன்மையும், மதமுறண்பாடும், கீதா ஆதாவு இல்லாமையும், நாட்டினருக்குப் புலனாகும். வறுமையால் ஏற்படும் கஷ்டங்களைப் போக்க கிரமமான வழிகள் இருப்பதால், அவைகளில் காந்திஜீ ஊக்கத்தைச் செலுத்துவாராக.

R. நடராஜன்.

---

# தீண்டாதார் கதி.

இப்போது இது விஷயத்தைப்பற்றி ஒவ்வொரு ஸனாதனியும் தன்னாலானவளவில் இப்போது நடக்கும் இயக்கத்தில் எதிர்த்துப் போராடவேண்டியது என்றுமட்டிலும் பத்திரிகை மூலம் என் அபிப்பிராயத்தை வற்புறுத்துகிறேன். 18-11-32 மித்திரனில் ஸ்ரீமான் என். எல். துரை என்பவர் திருச்சியிலிருந்து வெளியிட்டிருப்பதை படித்துப்பார்க்கும் ஒவ்வொரு ஆஸ்திகனுக்கும் சக்தியற்றவனாயினும் நாம் ஏதாவது பகவானது கட்டளையிலீடுபட வேண்டியவன்தானென்பது நன்கு வெளியாகும். தீண்டாதார் ஆலயப்ரவேசத்தை வற்புறுத்த இன்னார்தான் பேசவேண்டுமென்ற வரம்பில்லாமல் எல்லாரும் பேசவாரம்பித்திருப்பதைப்பற்றி என்னென்று சொல்வது? அவர்கள் நம்மைச் செய்யும் இகழ்ச்சிக்கு அளவில்லை. அவர்கள் பேசுவதோவெனில், வேதத்திலில்லை, சாஸ்திரத்திலில்லை, மற்றும் எதிலும் இல்லை என ஒரு சாரார். மற்றொரு சாரார் வேதசாஸ்திரங்களிலிருந்தாலும், அது காலத்திற்கேற்ற மாறுதல் செய்யப்படாததால் பயனற்றது என்று. இன்னும் சிலர் "அதற்கு அர்த்தம் வைதிகர்கூறுவது பிடிவாதத்துடனிருக்கிறது. அவர்கள் முரட்டுத்தனத்தால் 'பிடிவாதம்செய்கிறார்கள், என்று" மற்றும் சிலர் தர்மசாஸ்திரங்கள் அந்தந்தக் கால நடவடிக்கைகளைக் கூறவந்தனஎன்கிறார். அதிலும் சிலர் அத்யாயம் சுலோகம் இவைகளின் கணக்குப்போட்டு அதனர்த்தம் இது என்று லௌகிக வியாக்கியானமிட்டுக் கூறுகின்றனர். இத்தகைய புலிகள் மூலக்கிரந்தத்தை அப்படியே படித்துக் கூறுகின்றனரா? இல்லை. இங்கிலீஷ் தர்

ஜமாவைப் பார்த்துத் தனக்கு வேண்டியதை மட்டிலும் எடுத்து ரைக்கின்றனர். முழுமையும் தெரிந்த மாளவ்யா ஒருவர், இவர்கள் மாதிரி வேதத்திற்கு நான் அர்த்தம் சொல்வதுதான் சரி என்றெல்லாம் சொல்லத் துணியவில்லை. ஏனெனில் பிரமாணக் கிரந்தங்களின் அர்த்தத்தைத் தாறுமாருய்ச் சொன்னுல், பண்டிதர்கள் சும்மா விடமாட்டார்களென்று பயங்கொண்டு வேதத்தில் இல்லை, சாஸ்திரத்தில் இல்லையென்று பொதுவாய்ச் சொல்லி, இக்கன்றுக் குட்டிகளைத் தள்ள அவிழ்த்துவிட்டார். இளங்கன்று பயமறியாது, என்ற நியாயப்படி பிரமாண பயமறியாதகன்றுகள் துள்ளி மேலே பாய்கின்றன. ஆகவே இவர்களிடம் கோபமே கொள்ளக்கூடாது. இவர்கள் வார்த்தையைப் பொருட்படுத்தவும் வேண்டாம். ஆனல் நீர் ஏன் திருப்பித் திருப்பி எழுதுகிறீர் என்று கேட்டால் அதன் காரணம் இது.

நாம் அத்தகையோர்களுக்கு மறுப்பு எழுதினுல் அவர்கள் இதைப் பார்த்து வாய் மூடி இனி வேறு பேசமாட்டார்கள் என்ருவது, அவர்கள் இனி இந்து மதத்தை ஒழுங்காய் ஒழுகுவாரென்ருவது கொஞ்சமேனும் நான் எண்ணி எழுதவில்லை. மற்று அவர்களின் மாயவலையில், எல்லாரும்சிக்குண்டுபோழாய்போகாமல் இருக்கட்டுமே என்பதற்காக மட்டிலும்தான் பிரயாசை எடுத்துக் கொள்ளுகிறேன். இவ்விதம் நம் வேத சாஸ்திரங்களை இகழ்கிறவர்கள் இம்மதத்தைப் பூர்ணமாய் வெறுத்தவர்களென்பதை பன்முறை விவரித்திருக்கிறேன். காந்திக்கும் இந்துமதத்திற்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை என்பதையும் முன்னமேயே கூறியுள்ளேன்.

முன் ஸர்வகக்ஷி மஹாநாட்டுக்குப் போய் ஸ்வராஜ்யம் கொண்டுவரப்போவதாய் எண்ணிக் காந்திஅங்கு ஒருநாள் பேசும்போது கூறின ஒரு விஷயம் இப்போது கவனிக்கப்படவேண்டிய அவசியமானதால் அதனை வெளியிடுகிறேன். காந்தியின் வார்த்தை இது:—

"தீண்டாதவர்களை எப்பொழுதும் தனிப்பிரிவாகவைக்க நாங்கள் விரும்பவில்லை. சீக்கியர் சீக்யாகவிருக்கலாம், முஸ்லீம்களும், ஐரோப்பியர்களும் அப்படியே இருக்கலாம். தீண்டாதவர்கள் அப்படியே இருக்கப் பிரியப்படுகின்றனரா? அப்படிப்பட்ட இந்துமதம் ஒழிந்தாலும், அதை நான் விரும்புவேனேயல்லாது தீண்டாமை இருப்பதைச் சஹிக்கமாட்டேன்" என்று.



பிரிய வாசகர்களே! என்ன துணிவுடன் இவ்விதம் சொன்ருரென்பதைக் கவனியுங்கள். நம் மதம் அவ்விதம் கவனிப்பாரில்லாமல் தெருவில் கிடக்கிறதா? இந்தியாவென்ற பெயர் இந்துமதஸ்தர் இருப்பதையொட்டி வந்தது. இந்துமதம் தொலைந்தால் இத்தேசத்திற்கு என்ன பெயர் வைப்பதாய் நினைத்துக் கொண்டிருக்கிருரோ?

இதை இப்போது கூறவந்த காரணம் இது. ஏதோ இந்துமதம் அநியாயமாய்க் கெட்டுவிட்டது. அதில் உள்ள குற்றங்களை நீக்கி, இந்துமதத்தை முன்போல் ஓங்கிவளரச் செய்யவே பாடுபடுகிறேனென்று இப்போது சொல்லுகிருர். இந்த வெளிச்சத்தில் கன்றுகளும் விளையாடுகின்றன. உண்மை என்ன புலப்படுகிறது. பாருங்கள்! தீண்டாதவர்களைச் சேர்த்துக் கொண்டாலாயிற்று, அல்லதுஇந்துமதத்தை அழிப்பேன்என்கிருர். ஆகவே, அவருக்குப்பயந்து நாம் பேசாமலிருந்தால் தீண்டாதாருடன் சகல ஸம்பந்தங்களையும் அவர் கண்ணுள்ளபோதே பண்ணி வர்ணுச்ரம தர்மத்தைக் கெடுத்து, வேதசாஸ்திரங்களை களைந்து, நொடிப் பொழுதில்ஒருவருக்கொருவர் குடுமி முடித்துப்போட்டு, இந்தியாவை முன்னுக்குக் கொண்டுவந்து விட்டு ஸ்வாராஜ்யத்தால் ஒவ்வொரு பலசாலியையும் यस्यकस्य कुलेजातोधनी सर्वेश्वरः कलौ எக்குலத்திற் பிறந்தவனுயினும் பணமுள்ளவன் அரசன் என்ற நிட்டத்திற்குக் கொண்டுவந்து விட்டுவிடுவார். நாம் எதிர்த்தோமேயானுல் அவர்கள் ஜம்பம் பலிக்காமல் போவதால், அவர்கள் நம் மதத்தை விட்டு விலகலாம். ஆனுல் வாயில்லாத ஆதித்ராவிட சகோதரர்களை நமக்கு விரோதமாகக் கிளப்பிவிட்டு, கடைசியில் அவர்களின் கதியைப் பாழாக்கி விடுவார்கள். கடைசியில் காந்தி கோஷ்டி இப்படித்தான் ஆய்விடுமோ என்றுவருந்துகிறேன்.

இதற்கு நாம் செய்யவேண்டிய பரிஹாரம், முக்கியமாய் ஒவ்வொரு கிராமத்திற்கும் சென்றுஆதித்ராவிடர்களைக் கூட்டி, அவர்களுக்கு நம் சாஸ்திரநன்மொழிகளையும், அவர்களின் தெய்வ வழிபாட்டின் கிரமத்தையும் போதித்தால் நலம்.

இனி காந்தி பம்பாய் ஸநாதனிகளுக்கு எழுதிய பதிலைக் க... னிப்போம். பம்பாய் ஸநாதனிகள் ஏதோ காந்திக்கு எழுதிவிட்டார்கள். அதைப் பற்றி ஆலோசிப்பதாய் 2, 3-நாட்களாய்ப் பத்திரிகைகள் கூறின. பிறகு பிரமாதமாய் எழுதிவிட்டார். அதை இங்கு விரிவிக்க விருப்பமில்லை. மொத்தமாய் பார்த்தால், ஸநாதனிகளும் அவர் அபிப்பிராயத்துக்கு சமீபத்திற்கு வந்துவிட்டார்களாம். அதாவது ஆதித்ராவிடர்களுக்கு அனேக வசதிகள்செய்து கொடுக்க வேண்டியதுதான், என்று சொல்லிவிட்டார்களாம். இதனால் இவர் அபிப்பிராயத்திற்கு மிக நெருங்கி வந்துவிட்டார்களாம். இனி ஆலயவிஷயம் ஒன்று தானே வித்யாஸம் என்கிறார். இந்த வித்யாஸந் தான் என்றுமுள்ளது. இவ்வொன்றில்தான் மதம் மிகவும் பலமாய்க் குறுக்கிடுகிறது. இதைத் தவிர காந்தி சொல்லும் முன்னேற்றம் நடைபெற யாருக்குத்தான் சம்மதமில்லை? அவர்களுக்குப் பொதுக் கிணறுகளோ, குளமோ வீடு வாசல்களோ, நிலமோ, ஏராளமாய்க் கொடுக்கட்டும். இதை அவர் நினைத்தால், கூடிய மட்டிலும் செய்யலாம். அதில் ஸநாதனிகளும் இயன்றவளவு உபகரிக்க முன்வரலாம். ஆனால் அவர்களுக்குத் தான் அவ்விதம் தாரித்திரியம் என்று நினைத்துப் பேசுவது மிகக் குறைவுதான். ஒவ்வொரு ஜாதியிலும் மேடேற முடியாத மிகவருந்தத்தக்க ஏழைக்கூட்டம் இருக்கின்றனர். அவர்களுக்கு மட்டிலும் தயவுகாட்டுவதும், மற்ற ஏழைகளைக் கவனியாமல் இருத்தலும் நியாயமாகுமா? அவர்கள் ஒரு ஸமயம் தன் சொந்த வேலையால் கால் கஞ்சி குடிப்பார்கள். ஒருவழியுமின்றி தவிப்போர்கள் மற்ற ஜாதியில் ஏராளமாய் ஆதித்ராவிடர்களைக் காட்டிலும் இருப்பதுதான் கவனிக்கவேண்டும். ஆகவே, இவர் ஸநாதனிகளுக்குபதிற்கூறமுடியாதென்பதையாவரும் அறியவேண்டும்.

இனி இவர்களது ஆர்ப்பாடத்தைப் பாருங்கள். அலகபாத்தில் பெரிய ஒற்றுமை மகாநாடு நவம்பர் 2௨ கூடிற்று. அது கூடு முன் நிமிஷத்தில், அவர்களது எண்ணம் நிறைவேறிவிடுமென மனப்பாலை அளவின்றிப் பருகினர். ஆனால் நடக்கவாரம்பித்துச் சின்னாட்கள் போயும், அது எண்ணினபடி நடந்தேறவில்லையாயினும் அது முடிந்தது இது முடிந்ததென்று வெளிக்கூறிக் கொண்டு புறப்பட்டுவிட்டனர். இதுவும் நமக்குத்தேவையில்லை,



அவரது முதற்பிராணனான ராஜகோபாலாசாரியார், அலகபாத்தில் ஒற்றுமை மகாநாட்டை சரிவர முடித்துவிட்டு, குருவைக்கண்டு பேசிவிட்டு, உடனே திடீரென்று திருச்சியில் குதித்து, அங்கு ஒரு தீண்டாமை மகாநாட்டை நடத்தினர். அதில் வேதசாஸ்திரங்களை ஆராயும் தீரர்கள் கூடியிருந்தனராம். அதில் இவர் ஒருநாள் வைதிகர்களை ஏராளமாய் மனம் போனமட்டும் திட்டும்படி இரண்டொருவரை கிளப்பிவிட்டு, அவர்கள் பேசினபிறகு ஆசார்யார் முந்து வைதிகர்களை அவ்விதம்திட்டக்கூடாதென்று சமாதானம் செய்பவராய் அவர்களுக்கு "புத்தியில்லை. நாம் புத்தி புகட்ட வேண்டியதென்று" ஸ்தோத்திரம் செய்கிறார். இன்னும் மகாத்மா பட்டினி ஆரம்பிப்பதற்கு 40நாள்தான் இருக்கிறது. அதற்குள் அதாவது டிஸம்பர் முடிவுக்குள் ஆலயப்பிரவேசம் முடிந்துவிட வேண்டுமென்று ஸாத்விகமென்ற முரட்டுச்செயலுக்கு தன் அன்பர்களை தட்டி எழுப்புகிறார்.

இச்சமயம் காந்தி தமது சீடர்களுக்கு ஒரு புது உத்தரவு போட்டுவிட்டார். அதாவது "ஒருகோவிலிலும் ஹரிஜனங்கள் நுழைய ஏற்பாடு செய்யவேண்டாம். குருவாயூர்க் கோவில் ஒன்றிலேயே பலமான முயற்சி நடக்கவேண்டும். கோளத்தில் பலமான கிளர்ச்சி செய்யவேண்டும். நம்முடைய ஸாமர்த்தியம் அங்குதான் வெளிப்படவேண்டும். தக்க மனிதர்களைக் கோளத்திற்குப் போகச்சொல்லவேண்டும், அங்கு நமக்கு ஆதரவுகொடுப்பவர்களின் ஜனஸங்கியை ஆகவேண்டும்" என்று. ஆகவே இப்போது நமக்கிது ஒரு சோதனையான காலம்தான். அவர்கள் பணத்தாலும் ஆட்சேர்க்கையாலும் பிரபலஸ்தர்கள். நமக்குப் பணபலமில்லை, ஆட்சேர்க்கையுமில்லை. ஈசுவரன் ஒருவன்தான் பலம். எந்தபலம் வெல்லுமோ, அவருக்குத்தான் தெரியும்.

கோளத்திலுள்ள வைதிகஹிந்துக்கள், இதுவிஷயமாய் யாது செய்திருக்கின்றனர்? காந்தி கூட்டத்தார் பம்பாயிலிருந்தும் இன்னும் வடதேசத்திலிருந்தும் பிரபலஸ்தர்கள் அங்கு செல்கின்றனர்; இவர்களுடைய கூட்டத்தினாலும் நயபயவஞ்சக வார்த்தையாலும் ஒருசமயம் கள்ளிக்கோட்டைத் தம்பிரான் மனம் யாதாகுமோ? அவர் ஒருவர்தான் என்செய்வார்? ஆகவே நாமும், பிரபலஸ்தர்களான ஆஸ்திகக் கூட்டங்களாகக் கோளம்போய் பிரபல முயற்சி

செய்பவேண்டும். அப்போதுதான் கோள ஆஸ்திகர்களுக்குத் தைரியமுண்டாகும். நாமும் ஜனவரி 2முடிய அங்கு பிரபலமான பிரசாரவேலையைச் செய்யவேண்டும். கோள ஆஸ்திகர்கள் எங்கு என்ன நடத்திக்கொண்டிருக்கிறார்களென்பதைப்பிரபல தினஸரிப் பத்திரிகை வெளியிட மறுத்துவிடுமாயினும் நமது ஆர்யதர்மப் பத்திரிகையிலாவது இதைப்படிக்கும் ஆஸ்திகர்கள் உள்ளபடி எழுதினால் எம்போன்றவர்கட்கு ஆறுதல் ஏற்படும். அதன் பிறகு மேல் நடக்கவேண்டியதையும் கவனிக்கலாம். சுபம்.

M. N. சுப்பிரமணிய சாஸ்திரி.

மனுஸ்மிருதி அத்தியாயம் (3)

## சில வசனங்கள்

விவாஹ விஷயங்கள்.

1. பிராம்மண விவாஹத்தாலுண்டான புத்திரன் புண்ணியவானாயிருந்தால், தன்னையும், தன் வம்சத்தைச் சேர்ந்த தகப்பன் முதலான பத்து முன்னோர்களையும், பாவத்திலிருந்துவிடுவிப்பான். தவிர, அவனால் பின்வரும்பத்து ஸந்ததியார்க்கும் பாவம் நேராது.

2. தெய்வ விவாஹத்தாலுண்டான புத்ரன், முன்னிருந்த ஏழு பித்ருக்கள், பின்வரும் ஏழு ஸந்ததியார்கள், இவர்களையும் தன்னையும் பாவத்திலிருந்து காப்பாற்றுவான். ரிஷிவிதி விவாஹ புத்ரன்முன் மூன்று பித்ருக்கள் பின்வரும் மூன்று சந்ததியார்கள் இவர்களையும் தன்னையும் பாவத்திலிருந்து ரக்ஷிப்பான். பிராஜாபத்ய விவாஹ புத்ரன்,முன்னாறு பித்ருக்கள்;பின் ஆறு ஸந்ததிகள், இவர்களையும் தன்னையும் பாவத்திலிருந்து காப்பாற்றுவான்.

3. பிராஹ்ம விவாஹம் முதல் நான்கு விவாஹங்களால் வேதாத்யயன மஹிமை, பெரியவர்களின் ஸம்மானம், இவைகளை அடையக்கூடிய புத்ரர்கள் உண்டாவார்கள்.

4. தவிர அழகாயும், ஸர்வகுணம் பொருந்தியும், தனமுள்ளவும், யசஸுமுள்ளதும், வேண்டிய போகங்களுடையவும், தர்மங்களுடையவும் நூறுவயது உள்ளவுமான புத்திரர்கள் மேற் சொல்லிய விவாஹங்களிலிருந்து உண்டாவார்கள்.



5. அந்நான்கு விவாஹங்களுக்குப்பின்சொல்லப்பட்ட அசுத்தமான நான்கு விவாஹங்களால், துஷ்டர்களாயும் பொய் பேசுகிறவர்களாயும் வேதசாஸ்திர விரோதிகளாயுமிருக்கிற புத்திரர்கள் உண்டாவார்கள்.

6. தோஷமற்ற விவாஹத்தால் தோஷமற்ற ஸந்ததியும், தோஷமுள்ள விவாஹத்தால் துஷ்ட ஸந்ததியும் மனிதர்களுக்கு உண்டாகும். அதனால் தோஷமான விவாஹங்களைத் தள்ள வேண்டும்.

7. ஒரே வர்ணத்தார்களுக்குள் பாணிக்கிரஹண ஸம்ஸ்காரம் விதியாகும். வித்தியாஸ வர்ணங்களுக்குள் விவாஹ விஷயமாய் பின்சொல்லப்படும் விதி அனுஷ்டிக்கப் படவேண்டும் என்று தெரிந்துகொள்ளுங்கள்.

8. மேல்ஜாதிவரனைவிவாஹம்செய்யும்போது க்ஷத்ரியப்பெண் பாணத்தையும் வைச்யப்பெண் தாற்றுக்கோலையும் சூத்திரப்பெண் வஸ்திரவிளிம்பையும் பிடித்துக்கொள்ளவேண்டும்.

9. தன் பத்னியை மாத்திரம் கைகொண்டவனாயிருத்தல் வேண்டும்; சரியான காலத்தில்தான் அவளை அணுகவேண்டும். அமாவாஸை பௌர்ணமி தவிர அவள் மனதுக்கு இணங்கி நெருங்கலாம்.

10. ஸத்புருஷர்களால் தள்ளப்பட்ட தூரமான நான்கு நாட்களையும் சேர்த்து பதினாறு நாட்கள் ஸ்திரீகளுக்கு ஸ்வபாவமாய் ருதுஸம்ஸர்க்ககாலமாகும்.

R. ஸ்வாமிநாதய்யர்.

## காந்திஜியும், ஆலயப்பிரவேசமும்.

"நல்லாரொருவருளரேல் அவர் பொருட்டு எல்லோர்க்கும் பெய்யுமழை" என்னும், ஆன்றோர் சொல்லானது ஒரு அணுவளவும் பிசகல்ல. சென்ற 350-வருஷங்களாய், சதுர்வித வர்ணத்தாரும், (பெரும்பான்மையாய் பிராமணர்கள்) தங்கள் தங்களுக்குரிய தர்மாசாரத்தைவிட்டு, ஆங்கில உத்யோக பதவிக்கு ஆசைப்

பட்டு, அன்னியபாஷையை கைகொண்டு எந்நாளும் நித்யமா
தும், நித்திய சௌக்யத்தைக் கொடுக்கக்கூடிய மோக்ஷபதவிக்
உரிய ஏற்பாடுகளை செய்து நிற்கின்ற செல்வத்தை அடையாம
உலகமே நித்யம் என்று சொத்து சுதந்திரம் என்கிற இஹலோ
விஷயங்களில் ஈடுபட்டு நடந்துவந்ததின் பயன் சென்ற சிலகால
தில் நமக்கு நன்று விளங்கிவிட்டது. ஆனால் உலகத்தில் எல்லே
ரும் வழிதவறிவிட்டால் ஜனங்களுக்கு கெடுதல் நேரிடுமென்
நம்முன்னோர்கள் எண்ணி, தெய்வம் ஒன்று உண்டு. அதை நா
மறக்கக்கூடாது; நாஸ்திகம் கெடுதல்; என்பது நமக்
நன்று விளங்குமாறு அநேகஸ்தலங்களில் கோவில்களை நிர்மாண
செய்து, குளங்கள் வெட்டி இன்னும் ஜனங்களுக்கு அநேகவி
சௌகர்யங்கள் செய்திருக்கிறார்கள். இதன் பயனே இந்தியாவி
எவ்வளவோ பிறமதஸ்தர்கள் படையெடுத்து போர்புரிந்து
இந்துமதம் அழியாமலிருப்பதற்கு ஒரு முக்கியகாரணம். ந
முன்னோர்கள் கொள்கையை கடைப்பிடித்து நடப்போமான
நமக்கு சௌகர்யங்கள் ஏற்படுமென்பதில் கொஞ்சமேனும் ஐ
மில்லை.

இதுவரையில் காந்திஜியை சென்றசிலவருஷங்களாக நாம் பி
பற்றி நடந்துவந்தோம். அவர் இந்தியாவின் நன்மைக்கென்று
சுயாராஜ்ய போருக்கு சாதகமென்றும் வெளிப்படையாக சொல்
எல்லா இந்து கோவில்களில் தீண்டாதவரென்கிற பஞ்சமர்க
விடவேண்டுமென்று சொல்லி அப்படிச் செய்யாவிட்டால் உ
துறப்பேன் என்று சபதம் கூறுவதானது மிகவும் வருத்தத்
உண்டுபண்ணுவதல்லாமல் நம்முடைய நலத்தை உத்தேசித்
ஏற்பட்ட பிரயாசை என்று தோன்றவில்லை. இப்படி முயற்
செய்வதில் இவர் "கீதை"யின் சாராம்சத்திற்கு விருத்தமல்
வென்று தெரிவிக்கிறார். இவர் இந்துமதத்தைச் சேர்ந்தவரா
யிருந்தும், நம்முடைய தர்மசாஸ்திரத்திற்கு விரோதமான காரிய
செய்யத் தலைப்படுவதால், கீதையின் பொருளை நன்றாக அறி
வாக விளங்கவில்லை.

இந்த உலகத்தில் கர்ம பூமியாகிய இந்த பாரதவர்ஷமென்
இந்துதேசத்தில் சதுர்வர்ணத்தாரும் தங்கள் தங்கள் தர்
சாரத்தைப்பற்றி நடந்துவந்ததால், இதுவரையில் நமக்கு க



மென்பது தெரியாமலே ஜனங்கள் சுகமாக வாழ்ந்துவந்தார்கள். ஆனால் சென்ற சில ஆண்டுகளாக நம்மவர்கள் அன்னியமதஸ்தர் கொள்கை, ஆசாரம் முதலியவைகளைக்கைப்பற்றிநடந்துவந்ததால் எல்லோருக்கும் அநேகவிதமான கெடுதல்கள் ஏற்பட்டு வருகின்றன. இதன் சின்னங்கள் சுமார் 30-வருஷங்களுக்குமுன் தெரிய தலைப்பட்டாலும், நாம் அதை அசட்டை செய்ததின் பயன் இப்பொழுது உள்ளங்கை நெல்லிக்கனிபோல் நன்கு விளங்கிவிட்டது.

ஈசுவரகிருபையால் எது ஏற்பட்டாலும், அதற்கு புருஷப்பிரயத்னம் முக்யமென்பது நம்முடைய கொள்கைமாத்திரமல்ல. அன்னியதேசத்தாருடைய கொள்கையும் அதுவே. ஆகிலும் கோவில்களில் யார் பிரவேசித்தாலென்ன, ராக்ஷஸன் ஆண்டாலென்ன, ராமன் ஆண்டாலென்ன, நமக்குக்கிடைக்கவேண்டியது உத்தியோகம், பணம், பதவி, என்று நம்மவர்களில் பெரியவர்கள் என்று சொல்லப்படுபவர்கள் ஒரு முயற்சியும் செய்யாமலே இருந்தால், நமக்குக் கெடுதலே ஒழிய நலமல்ல. ஒரு சிறு விஷப்பூண்டு கிளம்பி கெடுதலை உண்டுபண்ணுமுன் அதைக் கிள்ளிவிடவேண்டுவதுபோல, இந்த ஆலயப்பிரவேசம் என்கிற விஷக்கிளர்ச்சியை ஆரம்பத்திலேயே தலைகிளப்பவிடாமல் செய்துவிடவேண்டும். இந்த விஷயத்தில் காந்தி முயற்சிசெய்கிறாரென்று நாம் கொஞ்சமேனும் பின்வாங்கக்கூடாது. மேன்மையானவர் என கருதப்படுகிறவர்கூட ஒரு அக்ரமமான காரியத்தில் பிரவேசித்தால் அதை நாம் தடைசெய்யத்தான்வேண்டும்.

இந்த தேசத்திலுள்ள ஹிந்து கோவில்களானது, அன்னிய நாட்டு மாதாகோவில்களைப்போன்ற பொதுஜனங்கள் ஓரிடத்தில் கூடித்தொழும் இடமல்ல. நம்முடைய ஆகம சாஸ்திரங்களை அனுசரித்து விசேஷஸ்தலங்களில்கோவில்களை நிர்மாணம்செய்து, அப்பிரதேச ஜனங்கள் கொள்கையை அனுஸந்தித்து, தெய்வத்தின் மஹிமையை ஒரு சிலாரூபமாகச்செய்து, எல்லாருக்கும் ஒருவித சௌகர்யத்தையும், ஈசுவரனிடம் ஒரு நம்பிக்கையையும் உண்டுபண்ணும் பொருட்டு பல வேதவித்துக்களாகிய பிராம்மண சிரேஷ்டர்களைக்கொண்டு தேவதா சான்னித்தியத்தை உற்பத்தி செய்திருக்கிறார்கள். இப்படிச் செய்திருப்பது ஜனங்களின் நன்மையை உத்தேசித்துமாத்திரமல்ல, நம்மை ஆளும் அரசனின்

நலத்தையும் கருதியே. ஆனல் இப்பேற்பட்ட கோவில்களை இடித்தும் இன்னும் அநேகவித துன்பங்களைக்கொடுக்க யத்தனித்த முகம்மதிய போர்வீரர்களின் கதி நாம் பார்க்கிறோம். ஆனல் அப்பேற்பட்ட முரட்டுத்தனமான செய்கைகளில் தற்கால அரசாங்கமானது தலையிட்டுக்கொள்ளாவிட்டாலும் நம்மவர்களே கோவில்களின் பெருமையையும், மஹிமையையும் குறைக்க எத்தனம் செய்வதானது, ஜனங்களுக்கும், நம்மை ஆளும் அரசனுக்கும் தீங்கை விளைவிக்கக்கூடிய காரியமாகும்.

ப. பாலசுந்தரம்.

---

௨

# ஸ்வதர்மத்தை விடக்கூடாது.

சென்னையில் ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சார்யார்ஸ்வாமிகளவர்கள் நவம்பர்மீ 13உ செய்த உபன்யாஸத்தில் ஸமூகப் பிரிவினைகள் தர்மப்ரகாரம் பிரித்திருப்பதைப்பற்றின உபதேச மொழிகளில் கூறியதாவது:—

இப்பொழுது இங்கிலீஷ்படிப்பேறிய ஜனங்களின்பங்க்தியில் எல்லோரும் ஜாதிவ்யவஸ்தையில்லாமல் ஒன்றுகச் சாப்பிடவேண்டும், ஜாதி வித்தியாசங்கள் கொஞ்சம்கூட இல்லாமல் போய்விடவேண்டுமென்று, ஒரு உணர்ச்சி உண்டாயிருக்கிறது, "எல்லோரும் ஒற்றுமையாகவேண்டும், எல்லோரும் கோயிலுக்குப் போகவேண்டும்" இம்மாதிரியான எண்ணங்கள் பூர்வம் நம் நாட்டில் இல்லாமல், இப்போது பிறநாட்டிலிருந்து உண்டானவை. நமக்கு உண்மை ஸ்வாராஜ்யம் வேண்டுமானல், நம்நாட்டில் அனாதியாய் இயற்கையில் ஏற்பட்ட பிரிவினைகளை அறிந்து நடக்கவேண்டும். பிறதேச நடவடிக்கைகளைப் பின்பற்றி நடப்பது சரியல்ல. உதாரணமாக, தலையை "கிராப்" செய்வதை எடுத்துக்கொள்வோம். இவ்விஷயத்தில் நாம் பிறரைப்பார்த்துசெய்கிறோம். மற்றவர்கள் நம் நடை உடை பாவனைகளைப்பின்பற்றுகிறார்களா? மகம்மதியர்கள் சுமார் ஆயிரம் வருஷம் ஆண்டார்கள். அப்பொழுது வர்ணாச்ரமதர்மம் தொடர்ந்து நின்றது. கெட்டுப்போகவில்லை. நம்முடைய பழக்கவழக்கங்களை மாற்றி, அவர்களைப்போல் நாம் தாடிவளர்க்கவில்லை. இங்கிலீஷ்காரர்களின் பழக்கமானது வந்து சுமார் நூறுவருஷங்கள்தான் ஆகிறது. அதற்குள் இந்தியர்கள் அநேகம்பேர் கிராப்செய்துகொள்ள ஆரம்பித்துவிட்டார்கள். இது ஒரு உதாரணம். நம் தேசத்தில் நாம் அடிமைகளாக இருப்பதாக சொல்லுகிறோம். உண்மையென்னவென்றல், நாமாகவே அடிமைகள்போல் நடந்துகொள்ளுகிறோம் ராஜாங்கத்தில் அப்படிச் செய்யவில்லை. நாம் நம் குலாசாரங்களையும், தர்மத்தையும் விட்டுவிட்டு, அடிமைகளாக மாறிவிட்டோம். தர்மத்தை கைவிட்ட நாம், வேறு எவ்வித அடிமைத்தனத்தையும் பொருட்படுத்தவேண்டாம். நாம் உண்மையான ஸ்வரூபத்தை இழந்துவிட்டோம். நாம் உண்மையான ஸ்வராஜ்யமடைந்து, சட்டம்செய்ய அதிகாரம் நமக்கு கிடைக்கும்போது, நாம் தர்மசாஸ்த்ரப்படி எப்படி இருக்கவேண்டும், என்ன செய்யவேண்டும். என்பதை அறியவேண்டும். நம்முடைய சக்தியெல்லாம் அதில் செலுத்தவேண்டும். இப்பொழுது சட்டசபைகளுக்குச் செல்லும் நம் பிரதிநிதிகள் பிறநாட்டு பழக்க வழக்கங்களைப் பின்பற்றுகிறார்கள். அவர்களுக்கு அதிகாரம் கொடுக்கும் பக்ஷத்தில், நமக்கு உண்மை ஸ்வாராஜ்யம் கிடைக்காமல், அடிமை ஸ்வாராஜ்யம்தான் கிடைக்கும். நாம் நமக்குச் சொந்தமான ஸமூக பழக்க வழக்கங்களில் சந்தோஷமாய் இருக்கலாம், என்பதை உணரவேண்டும். இப்போதிருப்பவைகளையும் காப்பாற்றி, இன்னும் மேன்மைகளடையவேண்டும். நம்முடைய சட்டசபைகளில் தர்மசாஸ்த்ரங்கள் தெரிந்து அதன்படி நடக்கும் பிரதிநிதிகளிடம் அதிகாரம் இருக்கவேண்டும். தர்மமே நிறைந்த வாழ்வு எப்படி நன்மைக்கும், த்ருப்திக்கும், எல்லோருடைய க்ஷேமத்துக்கும், காரணமாயிருக்குமென்று உலகோருக்குச்சொல்லவேண்டும்.

பிறதேசங்களின் பழக்கவழக்கங்களைப் பார்த்து அவ்விதமே நாமும் நடக்கவேண்டுமென்று நினைக்காமல், நம்முடைய நல்லதாயுள்ள சொந்த பழக்க வழக்கங்களை காப்பாற்றுவதே உண்மை ஸ்வாராஜ்யம் எனக் கருதவேண்டும்.

# வாரவிருத்தாந்தம்.

இவரையாவது ஆதரியுங்கள். 28உ ஸ்ரீரங்கத்தில் அகில இந்திய வர்ணாச்ரம ஸ்வராஜ்ய ஸங்க கார்யதர்சி ஸ்ரீமான் தேவநாதாசார்யர் தீண்டாமையைப்பற்றி ஓர் உபன்யாஸம் செய்தார். இவர் ஆங்காங்கு ஷை ஸபைக்குக் கிளைச் சபைகளை ஸ்தாபிக்கவும் தர்மப்ரசாரம் செய்யவும் வந்திருக்கிறார். ஹிந்தி ஸம்ஸ்கிருதங்களில் நன்றாக உபன்யாஸஞ்செய்வர். ஆஸ்திகர் அவரை அழைத்து ஸபை ஏற்படுத்தி தர்மத்தை விருத்தி செய்க!

8·அறிக்கைகள் வந்துள. தீண்டாமையை சாஸ்திர விதிகளுக்கு மாறாக மாற்ற ஆரம்பிக்குமோர் கோஷ்டியினர் தனம், செல்வாக்கு பத்திரிகை எல்லாவற்றையும்விட உயர்ந்தகலி என்ற ஸஹாயத்தைக்கொண்டு நடத்திவரும் பிரசாரத்தை தஞ்சை ஜில்லா பிராமண ஸபை எதிர்த்து யுக்தி யுக்தமாக அறிக்கைகளை வெளியிட்டிருக்கின்றது. இதை ஆமோதிக்காத ஆஸ்திகரிரார். இந்திய சட்டசபையிலும் விபரீத சட்ட மொன்றுதோன்றும்போலிருக்கிறது. இச் சமயத்தில் ஆஸ்திகருக்காக ஸ்ரீமடாதிபதிகளும் மற்றோரும் பலத்த ப்ரயத்நம் செய்கின்றனர். எதிரிகளது பலத்தை எதிர்த்து நிற்க ஆஸ்திகர் எழுந்திருக்கலாகாதா?

பகுத்தறிவுள்ள பெரியார். 28உ கொச்சி சட்டசபையில் ஓர் அங்கத்தினர் சண்டாளருக்கு ஆலயத்தைத்திறந்துவிடவேண்டுமென ஓர் சட்டமியற்றக் கோரினர். தலைவர் தேவஸ்வம் ஸம்பந்தமான விஷயங்கள் சட்டசபை விவாதத்திற்குரியனவல்ல என்று அதை நிராகரித்தார். இவரது பகுத்தறிவைக் கொண்டாடுகிறோம். இங்ஙனம் மற்ற தலைவர்களிருந்தால் போதும். தேசம் க்ஷேமத்தை அடையும்.

தலைவர் முன் வருக! 3உ தஞ்சை ஸநாதன தர்ம ஸபை கார்யதர்சி தனக்கு ஓர் சென்னை தலைவர் தீண்டாமை விஷயமாக எழுதிய கடிதத்தைப் பிரசுரித்து தனது அபிப்ராயத்தையும் வெளியிட்டிருக்கிறார். இங்கு ப்ரபல மத தலைவர்கள் ஆஸ்திக சிகாமணிகளாக விளங்குகின்றனர். இவர்கள் மிக்க செல்வாக்குள்ளவர்களே. இவர்கள் பத்ரிகைக்கு எழுதாத காரணம் தெரியவில்லை

